REGD. No. TN MS (C) 244 — ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) — Phone: 812818 — 4 பக்கம் விலை 30 காசு




# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்




மலர்: 2 — சென்னை 21—7—1978 வெள்ளி — நிர்வாக ஆசிரியர்: ஏ. கே. வில்வம் எம்.எல்.சி, — வெளியூர் 22—7—1978 சனி — இதழ்: 272

★ மருதுபாண்டியருக்கு நினைவுச் சின்னம்
★ காந்தி மியூசியத்தின் நட்டத்தை அரசு ஏற்கும்
★ மதுவிலக்கு பிரச்சாரத்துக்கு உதவி

# புரட்சித் தலைவரின் புதிய திட்டம்

## மதுரையில் திறந்த 'ஜீப்'பில் பவனி லட்சோபலட்சம் மக்கள் வரவேற்பு

மதுரை, ஜூலை 21- விடுதலை முழக்கமிட்ட மருதுபாண்டியருக்கு நினைவுச்சின்னம் அமைக்கப்படும். காந்தி மியூசியத்தின் இழப்பு ரூபாய் 75 ஆயிரத்தை அரசே ஏற்கும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

மதுரையில் திறந்த 'ஜீப்'பில் வீதிவீதியாகச் சென்று பிரச்சாரம் செய்தார். வழிநெடுக அவருக்கு சிறப்புமிகு வரவேற்பு கொடுக்கப் பட்டது.

மதுரை காந்திமியூசியத்திற்கு முதல்வர் புரட்சித் தலைவர் இன்று வருகை தந்தார். காந்தி அஸ்தி உள்ள சமாதிக்கு மாலை அணிவித்து மரியாதை செலுத்தினர்.

அமைச்சர் காளிமுத்து காந்தி கிராம பல்கலைக் கழக துணைவேந்தர் ராமசந்திரன், பாலகுருவா ரெட்டியார் மற்றும் பலர் பேசினார்கள். அங்குள்ள கண்காட்சியை குத்து விளக்கு ஏற்றி வைத்து முதல்வர் புரட்சித் தலைவர் திறந்துவைத்தார்.

துணைவேந்தர் ராமச்சந்திரன் தலைமை வகித்து பேசுகையில் இந்த கண்காட்சிக்கு அண்ணா வந்திருந்தார். அவர் நெஞ்சத்தில் காந்தி இருந்தார். இப்போது எம். ஜி. ஆர். வந்திருக்கிறார். காந்தி, அண்ணா இருவரையும் இதயத்தில் கொண்டவர் எம். ஜி. ஆர். தமிழ் நாட்டில் ஊழலற்ற ஆட்சி நடத்தி வருகிறார் என்றார்.

முதல்வர் புரட்சிதலைவர் பேசுகையில் கூறியதாவது:

ஒவ்வொருவர் இதயத்திலும் தூய ஒளி ஏற்படுத்தப்பட வேண்டும் அதில் எண்ணை என்பது தூய்மையாகவும், நேர்மை என்பது திரியாகவும் அன்பு என்பது சுடராகவும், விளங்கி அப்படிப்பட்ட தூய ஒளி வேண்டும். அரசியல் தலைவர்களாக இருந்தாலும் யாராக இருந்தாலும் காந்தி அடிகள் போதித்ததைப் போன்று உண்மை பேச வேண்டும். இதுபோன்ற கண் காட்சிகள் மக்களுக்கு நல்ல வழி காட்டிகளாக அமைய உதவும்.

காந்தி மியூசியத்துக்கு காங்கிரஸ் ஆட்சியில் ரூ. 25ஆயிரம் நிதி கொடுக்கப்பட்டதாகவும் பிறகுகருணாநிதி ஆட்சியில் அது ரூ. 5 ஆயிரமாக குறைக்கப்பட்டதாகவும் இங்கு தரப்பட்ட குறிப்பிலிருந்து அறிந்து கொண்டேன். வருடாவருடம் ரூ 75 ஆயிரம் பற்றுக்குறையில் இருப்பதாகச் சொன்னார்கள். அந்தப் பற்றுக்குறையை தமிழகஅரசு காந்திமியூசியத்துக்குக் கொடுத்து உதவும்.

(பலத்த கைதட்டல்)

### காமராஜர் தியாகம்

பெருந்தலைவர் காமராஜரைஎதிர்த்துபலமுறை நான் ஓட்டுக் கேட்டிருந்தாலும் அவரது தியாகத்தை ஒருபோதும் மறக்கவில்லை- மதிக்கத் தவறவில்லை.

காமராஜர் பெயரை மதுரை பல்கலைக் கழகத்துக்குச் சூட்டியது தமிழக அரசு. இதைக்கேட்கும் சிலருக்கு எங்கள்மேல் கோபம் ஏற்பட்டிருக்கிறது.

இங்கே துணைவேந்தர் ராமச்சந்திரன் பேசுகையில் ஊழலற்ற அரசு நடப்பதாக பாராட்டினார்.

நேர்மையான ஊழலற்ற ஆட்சி நடத்தி அனைவரும் பாராட்டும் வகையில் நடந்துகொண்டால் இயற்கையெய்தும்போதும் மனத்திருப்தி ஏற்படும்.

விடுதலைப் போராட்ட வீரர்களான மருதுபாண்டியருக்கு விரைவில் நினைவுச் சின்னம் அமைக்கப்படும். அதையொட்டி நூலகமும் அமைக்கப்படும்.

காந்தி மியூசியத்தில் காந்தி அடிகளின் பேச்சை ஒலிபரப்பலாம்.

### மதுவிலக்கு

மதுவிலக்கு திட்டத்தை நிறைவேற்ற இளைஞர்களுக்கு பயிற்சி அளிக்க வேண்டும். கிராமப்புறங்களுக்குச் சென்று அவர்கள் மதுவிலக்குப் பற்றிய பிரச்சாரம் செய்யும் செலவை அரசே ஏற்கும். சட்டத்தைக் கொண்டு மதுவிலக்கை அமல்படுத்துவதைவிட மனமாற்றத்தின் மூலம் வெற்றிகரமாக செயல்படுத்தலாம். மது ஒழிப்பு, சாதிஒழிப்பு ஆகியவற்றையும் இளைஞர்களைக் கொண்டுபிரச்சாரம் செய்யலாம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

### சூறாவளி பிரச்சாரம்

பின்னர் திறந்த 'ஜீப்' காரில் மதுரையில் வீதி வீதியாகச்சென்று கழக வேட்பாளர்களுக்கு புரட்சித் தலைவர் ஆதரவு திரட்டினார். வழி நெடுக ஆண்களும் பெண்களும்பல்லாயிரக்கணக்கில் திரண்டிருந்து புரட்சித் தலைவரை வரவேற்றனர். ''புரட்சித் தலைவர் வாழ்க'' ''எங்கள் ஓட்டு ரெட்டை இலைக்கே'' என்று விண்ணதிர மக்கள் முழக்கமிட்டனர்.

விளாங்குடி. பாத்திமா கல்லூரி, கக்கனேரி, செல்லூர், மீனாட்சி கல்லூரி, சுயராஜ்யபுரம், மற்றும் பல பகுதிகளில் புரட்சித் தலைவர் மக்களைச் சந்தித்து கழக வேட்பாளர்களையும் கழக அணி வேட்பாளர்களையும் ஆதரிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

---

# படித்தபெண்கள் தொழில் துவங்க புதிய திட்டம்

## புரட்சித்தலைவர் அறிவிப்பு

கோவை, ஜூலை 21— தொழிற்கல்வி பயின்ற பெண்கள் ஐந்து ஆறு பேர் சேர்ந்து கூட்டாக வீட்டிலோ அல்லது வெளியிலோ ஒரு தொழிலை ஆரம்பித்தால் அவர்களுக்கு தமிழக அரசு நிதிஉதவி செய்யும் அதற்கான திட்டங்களை தமிழக அரசு தயாரித்து வருகிறது என்று புரட்சித்தலைவர் அறிவித்தார்.

முதல்வர் புரட்சித் தலைவர் கோவை பி.எஸ்.ஜி. ஆர். மகளிர் கல்லூரி மாணவ மன்றத்தைதுவக்கி வைத்து பேசினார்.

இக்கல்லூரி மன்றத் துவக்க விழாவுக்கு ஜி.ஆர் தாமோதரன் தலைமை தாங்கினர். கல்லூரி தாளாளர் ஜி. சந்திர காந்தி அனைவரையும் வரவேற்றார்.

புரட்சித் தலைவர் மேலும் பேசுகையில் கூறியதாவது:-

கல்வி கற்பிப்பது ஊதியம் பெறுவதற்கு என்றும் கற்றுக்கொள்வது சுயநலத்துக்காக என்றும் கருதக் கூடாது. நாட்டில் நல்ல கல்வியை பயின்றால் அவர்கள் நல்லவராக வாழ்வார்கள்.

மகளிர் சமுதாயம் அடிமைகள் போல் ஒரு பரிதாபத்துக்குரிய நிலையில் இருந்தது மாறி இப்போது ஆண்களுக்கு உரிய சம அந்தஸ்து உண்டு என்பதை உணர்ந்து விட்டார்கள். இனிமேல் ஆண்கள் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய காலம் வந்து விட்டது.

பதவி கிடைத்தவுடன் எல்லா தகுதிகளும் வந்து விடும் என்பதை நான் எதிர்ப்பவன். பதவி காரணமாக மக்களுக்கு நல்ல சேவைகளை செய்ய, அதற்கான தகுதியை பெறுவதுதான் உண்மைநிலை என்பது எனது அசைக்க முடியாத நம்பிக்கை ஆகும்.

பட்டம் பெறுவதுதான் சமுதாயத்திடம் மதிப்பு,

(2-ம் பக்கம் பார்க்க)

---

### போலீசாருக்கு தவணை முறையில் சைக்கிள்கள்

பாண்டிச்சேரி, ஜூலை 21-ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா உதவியுடன் பாண்டிச்சேரியில் உள்ள 100 போலீசாருக்குதவணை முறையில் சைக்கிள்கள் வழங்கப்பட்டன.

*

### சுதந்திரதினவிழா: புதுவை முதல்வர் கொடியேற்றுவார்

புதுவை, ஜூலை 21- வருகிற ஆகஸ்ட்மாதம் நடக்கும் சுதந்திரதின விழாவில் புதுவை முதல்வர் ராமசாமி முதன்முதலாக தேசியக்கொடியை ஏற்றி வைப்பார்.

---

# மதுரை முத்து வார்டில் பொன்னையன் தீவிர தேர்தல் பிரச்சாரம்

மதுரை, ஜூலை 21— மதுரை முத்து போட்டியிடும் வார்டில் அமைச்சர் பொன்னையன் வீடு வீடாகச் சென்று ஓட்டு கேட்டார்.

அமைச்சருக்குமேளதாளத்துடன் வரவேற்பு கொடுக்கப்பட்டது. 38வது வட்ட வேட்பாளர் கிருஷ்ணனையும், ஆதரித்து பொன்னையன் ஓட்டுக் கேட்டார்.

தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் அமைச்சர் பொன்னையன்பேசும்போது ''புரட்சித் தலைவரின் தமிழ்காக்கும் அரசு ஆந்திரா கர்நாடகம், கேரளா ஆகிய தென்னக முதல்வர்களை கூட்டி தேசிய நீரோட்டத்தில் நல்ல பல தீர்மானங்களை நிறைவேற்றிப்புகழ் சேர்த்தவர் புரட்சித் தலைவர்'' என்று குறிப்பிட்டார்.

### பஸ்ஊழியர்க்கு கைகடிகாரம்

நேற்று மதுரையில் நடந்த ஒரு விழாவில் பாண்டியன் போக்குவரத்தில் 10ஆண்டு பணி புரிந்தவர்களுக்கு கைகடிகாரமும், 10 ஆண்டுகளுக்கு மேலாகபணிபுரிந்தவர்களுக்கு ரூ. 500 பரிசும் வழங்கப்பட்டது. அமைச்சர்பொன்னையன்இவற்றை வழங்கினர்.

---

# வானொலியில் புரட்சித் தலைவர் சிறப்புரை

தமிழகத்தில் கழக ஆட்சியின் ஓராண்டு சாதனைகளை விளக்கிடும் முதல்வர் புரட்சித்தலைவரின் உரையை 22-ஆம் தேதி சனிக்கிழமை இரவு 8-15 மணிக்கு சென்னை வானொலியிலும் தொலைக்காட்சியிலும் செய்தி- அறநிலையத் துறை அமைச்சர் ஆர். எம். வீ. வாசித்து வழங்குகிறார்.

இதற்கான ஏற்பாடுகளை சென்னை வானொலி நிலையமும், சென்னை தொலைக்காட்சி (டெலிவிஷன்) நிலையமும் ஏற்பாடு செய்துள்ளன.

கழக அரசு தமிழ்நாட்டில் அரசுப் பொறுப்பை ஏற்று கடந்த 30-ம் தேதியோடு ஓராண்டு நிறைவு பெற்றுவிட்டது.

கழக அரசு கடந்த ஓராண்டு காலத்தில் நிறைவேற்றிய சாதனைகளை விளக்கிடும் முதல்வர் புரட்சித்தலைவரின் உரையை முதல்வரின் சார்பில் தமிழக செய்தி- அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. வாசித்து வழங்குகிறார்.

இதை 22-ம்தேதி (சனிக்கிழமை) இரவு 8-15 மணிக்கு சென்னை வானொலி "ஏ" அலை வரிசையில் ஒலிபரப்புகிறது.

சென்னை வானொலி ஒலிபரப்பும் இதே ஒலி பரப்பை இதே நேரததில் சென்னை தொலைக்காட்சியும் (டெலிவிஷனிலும்) ஒளிபரப்புகிறது.

சென்னை வானொலி நிலையம் ஒலிபரப்பும் இதே ஒலிபரப்பை திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி, கோயம்புத்தூர் ஆகிய நிலையங்களும் அஞ்சல் செய்கின்றன.

---

கழகத்துக்கு ஆதரவு

### வேட்பாளர்வாபஸ்

மதுரை, ஜூலை 21- மதுரை மாநகராட்சி தேர்தலில் 33வது வட்டத்தில் சுயேச்சை வேட்பாளராக போட்டியிட்ட கே.பி. சுல்தான் தேர்தலில் இருந்து விலகி வாபஸ் பெற்றுக் கொண்டார்.

33 வது வட்டத்தில் கழக வேட்பாளராகப் போட்டியிடும் ஈ. பி. நாகூர்பிச்சையின் வெற்றிக்குப்பாடுபட உறுதி கொண்டிருப்பதாக கே.பி. சுல்தான் கனி அறிவித்தார்.

---

தமிழகத்திற்கு வருகை தந்த ஆஸ்திரேலிய நாடாளு மன்றக்குழுத் தலைவர்-வீட்டுவசதி அமைச்சர் ஆர். கே. குருமுக்கு தமிழக சபாநாயகர் முனுஆதி- நடராசர்சிலையை பரிசாக வழங்கினர்.

---

### மதுரை கழக தோழர்களுக்கு

# முக்கிய அவசர அறிவிப்பு

## மதுரை மாநகராட்சி தலைமைக் கழக துணைப்பிரதிநிதி நியமனம்

மதுரை மாநகராட்சி 37-வது வட்டம் வேட்பாளராக தனித்து போட்டியிட்ட திரு பி. வடிவேலு கட்சிகட்டுப்பாட்டைமீறி தனித்துபோட்டியிட்ட தவறை உணர்ந்து பொதுச்செயலாளர் புரட்சித் தலைவர் அவர்களிடம் தன் தவறுகளுக்கு வருந்தியும் மன்னிப்பு கேட்டும் அனைத்திந்திய அண்ணா தி. மு. க.-வின் அதிகாரபூர்வமான வேட்பாளர் திரு. கே. அழகிரிசாமி அவர்கள் வெற்றிபெற பாடுபடுவேன் என்று உறுதி கூறியதற்கு இணங்கவும் எழுத்துமூலம் எழுதி கொடுத்ததற்கு இணங்கவும் பொதுச் செயலாளர் புரட்சித் தலைவர் அவர்களின் மேலான ஒப்புதலோடு கழகத்தில் இணைந்து பணிபுரிய இன்று முதல் அனுமதிக்கப்படுகிறார்.

அத்தோடு இன்றுமுதல் மதுரை மாநகராட்சி தலைமைக் கழக துணைப் பிரதிநிதி என்ற பொறுப்பில் கழகப் பணிகளை ஆற்றுவார்.

கழகத் தோழர்கள் திரு. பி. வடிவேலு அவர்களோடு தொடர்ந்து கழகப்பணிகளுக்கு ஆக்கம் ஊட்டுமாறு தலைமை கழகத்தின் சார்பில் கேட்டுக்கொள்கிறோம்.

கே. ஏ. கிருஷ்ணசாமி
அமைப்புச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு கழகம்

மதுரை
21-7-78

---

# தேசாய்க்கு எதிராக இந்திரா போராட்டம்

புதுடெல்லி, ஜூலை 21- ''சரண்சிங்கின்கடிதங்களை வெளியிடாவிட்டால் தேசாயை எதிர்த்து இந்திரா காங்கிரஸ் தொண்டர்கள் போராட்டம் நடத்துவார்கள்'' என்று இந்திராகாந்திஅறிவித்தார்

நேற்று டெல்லியில் நடந்த கட்சி ஊழியர்கள் கூட்டத்தில் இந்திராகாந்தி பேசியதாவது:

''தேசாய்க்கும் சரண்சிங்குக்குமிடையே நடந்த கடிதப் போக்குவரத்தை வெளியிடகோரி இந்திரா காங்கிரஸ் ஊழியர்கள் அனைவரும் அணி திரண்டு போராட வேண்டும். தேசாயைப் பற்றிய ஊழல்களை சரண் சிங் எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார். அது பற்றிய விவரங்களை தெரிந்துகொள்ள விரும்புவது நாட்டில் உள்ள ஒவ்வொருவரின் கடமையாகும்.

எனவே அந்தக் கடித விவரங்களை வெளியிடக் கோரி இந்திரா காங்கிரஸ்கட்சியினர் போராட்டமும் பொதுக் கூட்டங்களும் நடத்தவேண்டும்.

அரிசனங்களுக்குதினமும் அட்டூழியங்கள் இழைக்கப்பட்டுவருகின்றன. விலைவாசிகள் ஏறுகின்றன. பொருளாதாரம் சீர்க்குலைந்துவிட்டது. எனவே அடுத்த (ஆகஸ்டு) மாதம் 9ந்தேதியை 'இந்தியாவை காப்பாற்றுங்கள்' என்ற கோரிக்கைநாளாககொண்டாடும்படி கேட்டுக்கொள்கிறேன்.

சுதந்திரப் போராட்டத்தின் போது ''வெள்ளையனே வெளியேறு'' என்று முழங்கியதைப்போல இந்தக் கோரிக்கை நாளும் அமையவேண்டும்''.

இவ்வாறு இந்திரா காந்தி கூறினர்.

# மாநிலங்களின் வரம்பிற்குள்வரும் விஷயத்தில் மத்திய அரசு குறுக்கிடக் கூடாது

புதுடெல்லி, ஜூலை 21- மாநிலங்களின் வரம்பிற்குள் வரும் ஒரு விஷயத்தில் மத்திய அரசு சாதாரணமாகக் குறுக்கிடக் கூடாது என்று நாடாளுமன்றக்குழு பரிந்துரை செய்துள்ளது.

குழுவின் அறிக்கை நேற்று மக்கள் சபையில் கூட்டுக் குழுவின் தலைவர் சியாமானந்தன் மிஸ்ரா வினால் தாக்கல் செய்யப் பட்டது.

மசோதாவின் வரம்பிலிருந்து மாநில முதல்வர்களை விலக்க வேண்டும் என்று குழு பரிந்துரை செய்துள்ளது. அற்பமான, பொய்யான புகார்களுக்கெல்லாம் தண்டனை வழங்கக் கூடாது. லோக்பால் சிறந்த முறையில் பணியாற்றக் கூடியவாறு அதிக அதிகாரங்கள் வழங்க வேண்டும்.

முதலமைச்சர்கள் பிரதானமாகத் தங்களுடைய சட்ட மன்றங்களுக்குப் பொறுப்பானவர்கள், நாடாளுமன்றத்திற்குப் பொறுப்பானவர்களல்ல. இந்த விஷயத்தில் மாநிலங்களுக்கும் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு என்று அட்டர்னி ஜெனரல் கருத்துத் தெரிவித்திருக்கிறார். ஆகையால் மாநிலங்களின் வரம்பிற்குள் வரும் ஒரு விஷயத்தில் மத்திய அரசு சாதாரணமாகக் குறுக்கிடக் கூடாது என்று கூட்டுக்குழு பரிந்துரை செய்திருக்கிறது.

பொதுவாழ்வில் உள்ளவர்கள் மீது அற்பமான அல்லது பொய்யானபுகார்கள் செய்பவர்களுக்கு அதிகபட்சமாக ஓராண்டு சிறைதண்டனையோ அல்லது ரூபாய் மூன்றாயிரம் வரை அபராதமோ விதிக்க வகை செய்யும் ஒரு புதியவிதியை மசோதாவில்சேர்க்கவேண்டும் என்றும் ஆலோசனை கூறப்பட்டுள்ளது. பொயான புகார்களுக்கு உள்ளான பொது வாழ்வில் இருப்பவர்களுக்கு தகுந்த நஷ்ட ஈடுதரவும் வகை செய்யவேண்டும்.

ஒரு நாடாளுமன்றஉறுப்பினர் மறைமுகமாகவோ நேரடியாகவோ தனக்காக பணம் அல்லது ஓர் அபூர்வமான பொருளைப்பெற தனதுபதவியைதவறுகபயன் படுத்தும்போது தான் தவறான நடத்தையில்ஈடுபட்டதாக அவரைக் கருத முடியும்.

இவ்வாறு குழு தாக்கல் செய்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

## கோவை செழியன் நிகழ்ச்சிகள்

ஜூலை 25ந் தேதி காலை 5-45 மணி சேலம், 10 மணி முதல் 12 மணி வரை சேலம் மாவட்ட விவசாயிகளுடனும் விவசாய சங்கத் தலைவர்களுடன் மாவட்ட ஆட்சியாளர் அலுவலகத்தில் சந்திப்பு, 12 மணி முதல் 1 மணி வரை பெரிய, சிறிய தொழிலதிபர்கள், கைத்தறி தொழிற்சங்கத் தலைவர்களுடன் கலந்துரையாடல், மாலை 3 மணி மோகனூரில் நீர்ப்பாசன சங்கத்தலைவர்களுடன்கலந்துரையாடல், இரவு 7மணி நீர்ப்பாசனம் பற்றி பொதுப்பணித்துறை அதிகாரிகளுடன்கலந்துரையாடல்.

*

## புரட்சித் தலைவர் அறிவிப்பு...

(1-ம்பக்க தொடர்ச்சி)

மரியாதை உண்டு என்று நினைக்காமல், நாம் கற்ற கல்வி அறிவுமற்றவர்களுக்கு பயன் பெற வேண்டும் என்பதை மனதில் கொள்ள வேண்டும்.

கல்வி பயிற்சி ஒருதொழிலுக்காக இருக்கவேண்டும். இதற்காகவே கல்வி முறை அடிப்படையிலேயே மாற்றப்பட வேண்டும் என்று தமிழக அரசு விரும்புகிறது.

பள்ளிகளில் பயிற்சி நேரம் போக மீதி நேரங்களில் தொழில் செய்து அந்த ஊதியத்தை வைத்து பள்ளி செலவை தீர்த்துக் கொள்ளலாம்.

இவ்வாறு புரட்சித் தலைவர் கூறினர்.

கல்விஅமைச்சர் அரங்கநாயகம், கூட்டுறவு அமைச்சர் கே. ஏ. கே., வேளாண்மை துறை அமைச்சர் ப. குழந்தைவேலு, கைத்தறி அமைச்சர் சுப்புலட்சுமி, கல்லூரி கல்விஇயக்குனர்ஸ்டெல்லா சவுந்தரராஜ் முதலானோர் பேசினர்கள்.

கல்லூரி முதல்வர் எச். நியுமேன் அறிக்கை வாசித்தார். மன்ற செயலர் நன்றி கூறினர்.

# புதுவையில் கழகஅரசின் சாதனைகள்: முதலமைச்சர் ராமசாமி விளக்கம்

**புதுவை, ஜூலை 21- கழக அரசு பொறுப் பேற்ற பிறகு செய்துள்ள சாதனைகள் குறித்து புதுவை முதல்வர் எஸ். ராமசாமி விளக்கினர்.**

வில்லியனூரை அடுத்த சிவராந்தகம் என்னும் அரிஜன காலனியில் எழுபத்தி ஐயாயிரம் ரூபாய் செலவில் கட்டப் பட்ட ஆரம்பப் பள்ளிக் கூட கட்டிடத்தை முதல்வர் ராமசாமி திறந்து வைத்தார். அப்போது அவர் பேசுகையில் ஆங்கிலம் இணை மொழியாக இருக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு தான் ஆரம்ப வகுப்பு முதல் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் போதிக்க வேண்டும் என்று உத்தரவிட்டதாகவும், உயர் செகண்டரி பள்ளிகளில் தனிவகுப்பு மூலம் ஆங்கிலத்தை போதிக்க வேண்டுமெனவும் கல்வித்துறை அதிகாரிகளி த்தில் கூறியதாகவும் தெரிவித்தார்.

மேலும் அவர்தெரிவித்ததாவது:

### 3 ஆயிரம் பேருக்கு மனை

கழகம் பதவி ஏற்ற பிறகு புதுவை மாநிலத்திற்கு ரூ. 8 கோடியாக இருந்த நிதி ரூபாய் 10.5 கோடியாக பெற்றது இந்த அரசின் சாதனை.

கழகம் பதவி ஏற்ற ஓராண்டு காலத்திற்குள் சுமார் 3 ஆயிரம் பேர்களுக்குஇலவசமனைப்பட்டா நிலமற்ற விவசாயிகளுக்கு நிலம் போன்றவை வழங்கப்பட்டது.

அனைத்து அதிகாரிகளையும் அழைத்து மக்கள் குறைகளை நீங்களே தீர்த்து வையுங்கள் என யோசனை கூறியுள்ளேன்.

### ஊழியர் பணி நிரந்தரம்

கல்வித்துறையில் பணி புரியும் ஆசிரியர்கள் ஊழியர்கள்ஆகியோர் பணிகள் நிரந்தரமாக்கப்படும்.

கழகம் பதவி ஏற்ற இந்த ஓராண்டு காலத்தில் பல நெருக்கடிகளை சமாளித்தது மட்டுமல்லாமல் மக்கள் குறைகளையும் தீர்த்து வைத்துள்ளோம். புதுவை கல்லூரி ஆசிரியர்களுக்கு மத்திய அரசில் உள்ளதுபோல் யு. ஜி. சி. சம்பள கமிஷனை அமலாக்க மத்திய அரசோடு தொடர்பு கொண்டு வருகிறோம்.

### தமிழ் புலவருக்கு வேலைவாய்ப்பு

தமிழில் புலவர்பட்டம் பெற்ற ஆசிரியர்களுக்கு புதுவை மாநிலத்தில் 20 சதவிகிதம் வேலை வாய்ப்பு கொடுக்கவும் அரசு உத்திரவு போட்டுள்ளது.

வரும் 6-வது ஐந்தாண்டு திட்டத்தில் முதியோர் கல்வி மற்றும் ஆரம்ப பள்ளிக்கூடம் மூலம் கல்வி போதிக்கவும் அரசு தீவிர கவனம் செலுத்தி வருகிறது.

தொழில்அதிபர்கள் கிராமப் புறங்களில் தொழில்களைத் துவக்கினால் உடனடியாக லைசென்ஸ் வழங்கப்படும். அதன் மூலம் படித்த மாணவ மாணவிகளுக்கும் வேலை வாய்ப்பு ஏற்படுத்தமுடியும்.

இவ்வாறு புதுவை முதல்வர் ராமசாமி கூறினார்.

சட்டமன்ற துணை சபாநாயகர் பழனிநாதன் விழாவுக்கு தலைமை வகித்தார். எஸ். கிருஷ்ணமூர்த்தி அனைவரையும் வரவேற்றார். துணைக் கல்வி அதிகாரி ஸ்காந்தகுமாரி மாவட்ட கல்வி அதிகாரி அருள்தாஸ் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினார்கள். முன்னதாக முதலமைச்சர் ராமசாமி பள்ளி சீருடைகளை பள்ளி தலைமை ஆசிரியர் ஆர். மாணிக்கராஜ் வசம் கொடுத்தார். ஆர். ராதாகிருஷ்ணன் நன்றிகூறினார். பிறகு முதலமைச்சர் ராமசாமி, பழனிநாதன் ஆகியோர் குடிசைகளுக்கு சென்று மக்களிடத்தில் குறைகளை விசாரித்தனர்.

முதல்வர் ராமசாமிதகவல்

## புதுவையில் விரைவில் நகரசபை தேர்தல்

புதுவை. ஜூலை 21 புதுவை அமைச்சரவையைக்கூட்டிய பிறகு தான் நகரசபைத்தேர்தல்நடத்த முடிவு செய்யப்படும் என்று முதல்வர் ராமசாமி கூறினார். நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் அவர் மேலும் தெரிவித்ததாவது:

வாக்காளர் பட்டியல்மற்றும் வார்டுகள் திருத்தி அமைப்பது போன்றவை செய்வதில்தான் காலதாமதம் ஏற்படுகிறது. நகரசபைத் தேர்தல் விரைவில் நடக்கும்.

மதுரை நகரசபையை கழகம் கைப்பற்றப் போவது உறுதி.

மாரிக் கால சட்டமன்றக் கூட்டத் தொடர் அக்டோபர் மாதம் முன்பு நடைபெறக் கூடும்.

புதுவையில் குடும்பநலத் திட்டம் தீவிரமாக அமலாக்க ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. இதில் உள்துறை அமைச்சர் ராமச்சந்திரனும், சட்ட மன்ற உறுப்பினர்களும் கலந்து கொண்டு பல யோசனைகளைக் கூறினார்கள்.

இவ்வாறு முதல்வர் ராமசாமி நிருபர்களுக்கும் பேட்டியளித்தார்.

*

## அமைச்சர் ஆர். எம். வீ. நிகழ்ச்சிகள்

ஜூலை 22ந்தேதி காலை 9 மணி திருநெல்வேலி ரயில் நிலையத்தில் வரவேற்பு, 10-30 மணி ஆலங்குளம் ஒன்றியம்ரெட்டியார்பட்டி ஊராட்சிமன்ற கட்டட அடிக்கல் நாட்டுவிழா.

11-30 மணி ஆலங்குளம் ஒன்றியம் நெட்டூர் ஊராட்சிமன்ற வரவேற்பு மாலை 4 மணி குற்றாலம் பராசக்தி அரசினர் மகளிர் கல்லூரி வரவேற்பு.

5 மணி குற்றாலம் பண்பொழில் திருமலைக்கோவில் தேவஸ்தானம் பெண்கள் மேல்நிலைப்பள்ளி துவக்கி வைத்தல். 6-30 மணி குற்றாலம் 'சாரல் விழாவினை' துவக்கிவைத்தல்.



தங்கமணி பப்ளிகேஷனுக்காக 156, அவ்வைசண்முகம் சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர்: பி. தங்கராஜன், நவசக்தி அச்சகம், கச்சேரிசாலை, சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி

# கோர்ட்டில் தேங்கிய வழக்குகள்: நாடாளுமன்றத்தில் கண்ணன் வினா

புதுடெல்லி, ஜூலை 21- கோர்ட்டில் தேங்கியுள்ள வழக்குகளை பைசல் செய்ய அரசு எடுத்துள்ள நடவடிக்கை பற்றி நாடாளுமன்றத்தில் சேலம் கண்ணன் ஒரு கேள்வி எழுப்பினார்.

அதற்கு மத்திய சட்ட அமைச்சர் அளித்தபதிலில் கூறியிருப்பதாவது:

சுப்ரீம்கோர்ட்டில் 1978 ஜூன் 30-ம்தேதி வரை 14,482 வழக்குகளும் நாட்டிலுள்ள 18 உயர் நீதி மன்றங்களில் 1977 டிசம்பர் வரை 6,07,918 வழக்குகளும் பைசல் ஆகாமல் உள்ளதாக மக்களவையில் சட்ட அமைச்சர் சாந்திபூஷண் தெரிவித்தார்.

சேலம் பி. கண்ணன் எழுப்பிய கேள்விஒன்றுக்கு எழுத்து மூலமாக பதில் அளித்த சட்ட அமைச்சர் கோர்ட்டுகளில் வழக்குகளை விரைவில் பைசல் செய்ய எடுக்கப்பட்டு வரும் நடவடிக்கைகளை விவரித்தார். சுப்ரீம் கோர்ட்டின் நீதிபதிகளின் எண்ணிக்கை 13 லிருந்து 17ஆக 1977டிசம்பர் 31 முதல் உயர்த்தப்பட்டுள்ளது. இதில் தலைமை நீதிபதிசேர்க்கப்படவில்லை. 1978 ஜனவரி, பிப்ரவரி 22 ஆகிய தேதிகளில் நீதிபதி கோஸ்வாமி, நீதிபதி எம். எச். பேக் ஓய்வு பெற்றதை அடுத்து புதிய நீதிபதி நியமிக்கப்பட்டுள்ளனர் என்றும் அவர் கூறினார்.

சுப்ரீம் கோர்ட்டில் உள்ள வழக்குகளை விரைவில் பைசல் செய்யஜனாதிபதியின் ஒப்புதலுடன் சுப்ரீம் கோர்ட் அண்மையில் சுப்ரீம் கோர்ட் விதிகளை திருத்தியுள்ளது என்றார் அவர்.

உயர்நீதி மன்றங்களில் பெரும்பான்மையான காலி இடங்கள் நிரப்பப் பட்டுள்ளன, உயர் நீதி மன்ற தலைமை நீதிபதிகள் உட்பட மாநில அதிகாரிகளிடமிருந்து மத்திய அரசு யோசனைகள் கோரியுள்ளன. தேவையான நபர்களுக்கும் நினைவூட்டுக்கடிதங்களும் அனுப்பப்பட்டுள்ளன. 1977 ஏப்ரல் 1 முதல் 1978 ஜூலை 15 வரை 66 புதிய நியமனங்கள் செய்யப்பட்டுள்ளன என்றும் அமைச்சர் தெரிவித்தார்.

## மதுரை நகர வரலாறு காணாதவகையில்

### 30 மைல் தூரம்

# சைக்கிள் ஊர்வலம்

## வார்டு வார்டாக சென்று மன்ற தோழர்கள் தீவிரப் பிரச்சாரம்

**மதுரை, ஜூலை 21- மதுரையில் எம். ஜி. ஆர். மன்றத் தோழர்கள் எழுச்சி மிகு சைக்கிள் பேரணி நடத்தினர்கள். 3 மணி நேரம் 30 மைல் தூரம் நகர் முழுவதும் எல்லா வார்டுகளையும் பல்லாயிரக்கணக்கான தோழர்கள் சைக்கிளில் சுற்றி வந்து பிரச்சாரம் செய்தனர்.**

மதுரை மாநகராட்சித் தேர்தலில் கழக வேட்பாளர்களை ஆதரித்து எம்.ஜி. ஆர். மன்றத்தினர் மதுரை நகர வரலாறுகாணாதவகையில் சிறப்புமிகு ஊர்வலம் நடத்தினர்கள்.

அனைத்துலக எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன் தலைமையில் இந்த சைக்கிள் ஊர்வலம் நடந்தது.

மதுரை மற்றும் சுற்று வட்டாரத்தைச் சேர்ந்த எம். ஜி. ஆர். மன்றத் தலைவர்கள் சைக்கிள்களில்வந்து இந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டனர்.

முசிறிப்புத்தனும்மற்றும் தோழர்களும் 3மணிநேரம் சைக்கிளில் 30 மைல்தூரம் சுற்றி எல்லா வார்டுகளிலும் பிரச்சாரம் செய்தனர்.

வலத்தை துவக்கி வைத்தார். மதுரை பெரியார் திடலில் ஊர்வலம் முடிந்தது.

ஊர்வலம் வெற்றிகரமாக நடைபெற உதவிய தோழர்களுக்கு நன்றியும்பாராட்டும் தெரிவித்து முசிறிப்புத்தனும் சவுந்தரராஜனும் பேசினர்கள்.

## தென்னாற்காடு விவசாயிகட்கு மாநிலவங்கிஉதவி

சென்னை, ஜூலை 21- தென்னாற்காடு மாவட்ட விவசாயிகளுக்கு, ஸ்டேட் பாங்கு கடந்தமாதங்களில் பலவிதங்களில் உதவி புரிந்துள்ளது. இம்மாவட்டத்தில் ஸ்டேட் பாங்கு கிளைகள் 21 உள்ளன, அவை விவசாயிகளின்வாழ்க்கைத் தரம் உயர சுமார் 387கிராமங்களைத் தன்பொறுப்பில் எடுத்துக் கொண்டுள்ளது.

கிராம அபிவிருத்திக்காக அகரம், சிந்தானூர் கிராமத்தில் ஒட்டுமொத்தமாக எல்லாமே அபிவிருத்திக்கும் உதவும் வகையில், 94பேருக்கு ஒரு லட்சத்து 14 ஆயிரம் ரூபாயும் 26 நிலமற்ற விவசாயிகளுக்கு 12 ஆயிரம் ரூபாயும் உழவுமாடுகள் வாங்குவதற்காக 50 பேருக்கு சுமார் 27ஆயிரம் ரூபாயும் வழங்கியுள்ளது.

## சவுந்தரபாண்டியன் ஓட்டுக்கேட்டார்

**மதுரை, ஜூலை 21— மதுரைமாநகராட்சி தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளர்களுக்கு ஆதரவு திரட்ட அரிசன நலத்துறை அமைச்சர் பெ. சவுந்தரபாண்டியன் வீடு வீடாகச்சென்று வாக்குகேட்டார்.**

மதுரை மாநகராட்சி தேர்தலில் 7வது வார்டில் போட்டியிடும் கழக வேட்பாளர் வழக்கறிஞர் பட்டுராஜனை ஆதரித்து, அரிசன நலத்துறை அமைச்சர் பெ. சவுந்தரபாண்டியன் பிரச்சாரம்செய்தார்.

அமைச்சர் சவுந்தர பாண்டியன் நேற்று (வியாழக் கிழமை) காலை 10 மணிக்கு மதுரைநகரில் ரிசர்வ் போலீஸ்குடியிருப்புப் பகுதி நகரசுத்தி தொழிலாளர் குடியிருப்புபகுதி, ஆத்திகுளம் அரிசன குடியிருப்பு சொக்கிகுளம்பகுதி அண்ணாநகர் அரிசன நலக் குடியிருப்பு ஆகிய பகுதிகளில் பட்டுராசனுக்கு ஆதரவாகவாக்குகள்கேட்டார்.

அமைச்சர் சவுந்தர பாண்டியனுடன் தமிழ் நாடு குடிசைமாற்று வாரியத் தலைவர் பி. ராமபத்திரனும் சென்று கழக வேட்பாளர் பட்டுராசனுக்கு ஆதரவு திரட்டினர்.

## திறந்த 'ஜீப்'காரில்

கூடலூர் ராமசாமி எம்.பி,பாலகுருவாரெட்டியார், லட்சுமிநாராயணன் ஆகியோர் திறந்த ஜீப் காரில் வந்தனர்.

அமைச்சர் காளிமுத்து மற்றும் பலர் இந்த ஊர்வலத்தை நகரின் முக்கிய வீதிகளில் நின்று பார்வையிட்டனர்.

அனைத்துலக எம். ஜி. ஆர் மன்ற பொதுச் செயலாளர் திருச்சி சவுந்தரராசன், தெப்பக்குளம் மைதானத்தில் இந்த ஊர்

## மதுரையில் பி. எச். பாண்டியன் பிரச்சாரம்

மதுரை, ஜூலை, 21- கழக மாநில வழக்கறிஞர் பிரிவு அமைப்பாளரும் சேரன்மாதேவி சட்டமன்ற உறுப்பினருமான பி. எச். பாண்டியன் மதுரைமாநகராட்சித்தேர்தலில் தீவிர பிரச்சாரம் செய்கிறார். கழக கூட்டணி வேட்பாளர்களை ஆதரித்து பல்வேறு கூட்டங்களில் அவர் பேசுகிறார். அவருடன் சேரன் மாதேவி தொகுதியைச் சேர்ந்த தோழர்களும் சென்றுள்ளனர்.




## மதுரையில் கே. ஏ. கே.

மதுரை, ஜூலை 21- கோவை சிறப்புக் கூட்டத்தில் கலந்து கொண்டு விட்டு கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ. கே. நேற்றுஇரவு மதுரை வந்து சேர்ந்தார்.

மதுரை மாநகராட்சித் தேர்தல் முடியும் வரை அவர் மதுரையில் தங்கி இருந்து தேர்தல்பணிகளைக் கவனிப்பார். முதல் வர் புரட்சித் தலைவருடன் மதுரை நிகழ்ச்சிகளில் அமைச்சர் கே. ஏ. கே. கலந்து கொள்கிறார்.

### வெற்றி மலரை புரட்சித்தலைவருக்கு சூட்ட

# மன்றத் தோழர்களே மதுரையில் அணிதிரள்வீர் முசிறிப்புத்தன் அறிக்கை

**மதுரை, ஜூலை 21- வெற்றி மலரை புரட்சித்தலைவருக்கு சூட்டிட எம் ஜி ஆர். மன்றத் தோழர்கள் மதுரைக்கு வருமாறு அனைத்துலக எம் ஜி ஆர். மன்றத் தலைவர் முசிறிப்புத்தன் வேண்டுகோள் விடுத்துள்ளார்.**



மன்றத் தோழர்களுக்கு முசிறிப்புத்தன்விடுத்துள்ள வேண்டுகோள் வருமாறு:

மதுரை மாநகராட்சித் தேர்தல் களம் உங்களை எதிர்பார்க்கிறது. பொங்கும் கடலென மதுரையில் திரண்டு கடமையாற்றிட வாரீர்.

உழைப்பால் ஒரு முறையல்ல பலமுறை வெற்றி கண்டது கழகத் தோழர்களின் அயராத பணியல்லவா?

சினிமா பார்க்கும் சிறுவர்கள் கூட்டம் இது என்று கேலி பேசியவர்களும் திண்டுக்கல் தேர்தலுக்குப் பின் வாயடைத்து போகவைத்ததுஉனதுதிண்தோள் அல்லவா?

கட்சி தொடங்கிய ஐந்தே ஆண்டில் உலக வரலாறு காணா வகையில் ஆட்சிப் பொறுப்புக்கு வந்ததும் ஊழல் மன்னர்களை வீட்டுக்குஅனுப்பி புரட்சித் தலைவரை கோட்டையில் அமர வைத்ததும் உனது அயராத உழைப்பன்றோ!

### கூடலில் புரட்சித் தலைவர்

பாண்டியன் தலைநகராம் மதுரைக்களம் மீண்டும் அழைக்கிறது.

நமது இதயதெய்வம் புரட்சித்தலைவர் கூடல் நகரம் வந்துள்ளார்.

பல்லாயிரக்கணக்கான தோழர்கள் பங்கேற்ற 30 மைல்தூர சைக்கிள் ஊர்வலத்தில் சுற்றி வந்துள்ளேன்.

நானும் செயலாளர் சவுந்தரராசனும் மற்றும் மன்றத்தோழர்களும் உன் வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கிறோம். பணி நிறைய உள்ளது.

வெற்றி மலரை புரட்சித் தலைவருக்கு சூட்ட புறப்பட்டுவா மதுரைத் திருநகருக்கு.

இவ்வாறு அந்த அறிக்கையில் முசிறிப்புத்தன் கூறியுள்ளார்.

## சென்னை மாநகராட்சி: 150 வட்டங்களாக பிரிக்க ஏற்பாடு

**சென்னை, ஜூலை, 21— சென்னை மாநகராட்சியில் தற்பொழுது 120 வட்டங்கள் (டிவிஷன்கள்) மட்டுமே இருக்கின்றன. இதை 150 வட்டங்களாக பிரிக்கும் பணி விரைவில் தொடங்கப்பட்டு விடும் என்று சென்னை மாநகராட்சி தனி அதிகாரி ராமதாஸ் கூறினார்.**

சென்னை மாநகராட்சியின் தனி அதிகாரி சி. ராமதாஸ் நேற்று (வியாழன்) நிருபர்களுக்குபேட்டியளித்தார். அப்பொழுது அவர் கூறியதாவது:-

சென்னை மாநகராட்சி தேர்தலுக்காக இதுவரை நடந்துவந்த வாக்காளர் கணக்கெடுப்புப் பணிகள் முடிவடைந்து விட்டன. அரசாங்கத்தின் அனுமதி கிடைத்தவுடன் இப்பொழுது 120 வட்டங்களாக உள்ளதை 150 வட்டங்களாக பிரிக்கும் பணி தொடங்கிவிடும்.

சென்னை நகரில் சுத்திகரிப்பு பணிகளை கண்காணிப்பதற்கு என்று 5 டிவிஷன்களுக்கு ஒரு அதிகாரி வீதம் 125 டிவிஷன்களுக்கு 25அதிகாரிகள் நியமிக்கப் பட்டிருக்கிறார்கள். குப்பைகளை அள்ளுவதற்

8-ம் பத்தி பார்க்க

(6-ம் பத்தி தொடர்ச்சி)

காக புதிதாக 24 'டிரக்' வண்டிகள் வாங்கப்பட்டுள்ளன.

குப்பைத் தொட்டிகளுக்கு நீலநிறம் பூசப்படும். இதுபோன்ற குப்பைத்தொட்டிகள் திருமலைப்பிள்ளை சாலையில் வைக்கப்பட்டுள்ளன.

சென்னை நகரில் விஸ்தரிக்கப்பட்ட பகுதிகளில் நகர சுத்திகரிப்பு பணிகள் விரிவாக்கப்பட்டிருக்கின்றன.

மழைக் காலங்களில் தண்ணீர் தேங்குவதை தடுக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. இதற்காக நாலு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டு இருக்கிறது. இந்தப் பணிகள் வருகிற அக்டோபர் மாதம் 15ம் தேதிக்குள் முடிந்து விடும்.

சென்னை கிருஷ்ணாம் பேட்டையில் "மின்சார சுடுகாடு" செயல்படத் தொடங்கிவிட்டது.

பஸ் போக்குவரத்து இல்லாத பகுதிகளில் சாலைகளை சீரமைப்பதற்காக 40 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது.

சென்னை மாநகராட்சிப் பள்ளிகளில் கல்வியின்தரத்தை உயர்த்துவதற்கு தனிகவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதற்காக நான்கு உதவிக் கல்வி அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர்.

இவ்வாறு தனி அதிகாரி சி. ராமதாஸ் கூறினார்.

### மதுரை மாநகராட்சி தேர்தல்

# கழக அணியினர் தீவிர தேர்தல்பணி

மதுரை மாநகராட்சி தேர்தலில் கழகப் பிரச்சாரம் வெகு தீவிரமாக நடைபெற்று வருகிறது, நாள்தோறும் 150க்கு மேற்பட்ட கூட்டங்களும் கலா நிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன.

மாநகராட்சி தேர்தலுக்கு இடையில் இன்னும் 5 நாட்களே உள்ளன. 26ம் தேதி தேர்தல் நாள் ஆகும்.

மதுரை மாநகரம் புரட்சித் தலைவரின் கோட்டை என்பதை நிரூபிக்கும் வகையில் கழகத் தோழர்களும், மன்றத்து அடலேறுகளும், கூட்டணிக் கட்சியினரும் தீவிரமாகச் செயல்பட்டு வருகின்றனர்.

பேரறிஞர் அண்ணா, புரட்சித்தலைவா திருவுருவங்கள் தாங்கிய சுவரொட்டிகள் வீதிதோறும் ஒட்டப்பட்டுள்ளன. திரும்பிய திசையெல்லாம் கழகக் கொடிகளே நிறைந்து காணப்படுகின்றன.

புரட்சித்தலைவரின் வெற்றிச் சின்னமான இரட்டை இலைச் சின்னம், காண்போரைக் கவரும்வகையில் நகரச் சுவர்களில் காட்சியளிக்கின்றது.

டவுன் ஹால் ரோடு, முனிச்சாலை மேலமாசி வீதி, சொக்கிகுளம்,சாத்தமங்கலம், மதிச்சியம் உள்பட பல பகுதிகளில் கழகத் தோழர்கள் - இரட்டை



இலைச்சின்னத்தை மின்சார விளக்குகளால் அலங்காரம் செய்துள்ளனர்.

46வது வார்டு கழகவேட்பாளர் அப்சர்உசேன் தனது பகுதியில் அழகான வரவேற்பு வளைவு ஒன்றை அமைத்து, அதை மின் விளக்குகளால் அலங்கரித்துள்ளார்.

கழகவேட்பாளர்கள் அயராது நாள்தோறும் வாக்காளர்களைச் சந்தித்து ஆதரவு திரட்டி வருகின்றனர். புரட்சித் தலைவரின் ஆணைக்கு இணங்க, வீடு வீடாகச் சென்று அவர்கள் உண்டியல் ஏந்தி நிதியும் திரட்டி வருகின்றனர்.

கழக வேட்பாளர்களை ஆதரித்து தினமும் ஒரு ஊர்வலம் நடைபெற்று வருகிறது.

கழக வேட்பாளர்களையும் கூட்டணி வேட்பாளர்களையும் ஆதரித்து மகளிர் பிரிவினரும, மாணவர் அணியினரும், வீடு வீடாகச் சென்று வாக்குகள்சேகரித்து வருகின்றனர்.

மகளிர் அணிச் செயலாளரும், அமைச்சருமான பி.டி. சரஸ்வதி வீடு வீடாகச் சென்று ஓட்டுக் கேட்பதுடன் ஏராளமான கூட்டங்களிலும் பேசி வருகிறார்.

மாநில மகளிர் பிரிவு அமைப்பாளர் வளர்மதி, மதுரை தொகுதி அமைப்பாளர்கள் எம். சரஸ்வதி, பிரமிளாகாந்தி, எஸ்.கே. விஜயா, தில்லை சுலோசனா ஆகியோர் தலைமையில் நூற்றுக்கு மேற்பட்ட கழகத்தோழியர்கள் ஆதரவு திரட்டி வருகின்றனர்.

காலை 7 மணியிலிருந்து மாலை 7மணிவரை ஓட்டு வேட்டையாடும் இவர்கள், பிறகு நகரின் பல்வேறு இடங்களில் நடைபெறும் பிரச்சாரக் கூட்டங்களில் கலந்துகொண்டு பேசுகின்றனர்.

அனைத்துக் கல்லூரிகளையும் சேர்ந்த மாணவர்கள் சுமார் 500 பேர் மாவட்ட மாணவர் பிரிவு அமைப்பாளர் ராஜன் செல்லப்பா இணை அமைப்பாளர் பெ. செல்வேந்திரன் ஆகியோர் தலைமையில் தினமும் ஆதரவு திரட்டி வருகின்றனர்.

தாய்மார்களின் கால்களில் விழுந்து கழக அரசின் சாதனைகளை எடுத்துக் கூறியும், புரட்சித் தலைவரின் அணிக்கு வாக்களிக்க வேண்டியதன் அவசியம் பற்றியும் விளக்கமாக எடுத்துக் கூறி வருகின்றனர்.

தேர்தல் பிரச்சாரத்தைப் பொறுத்த அளவில் முன்னணியில் இருப்பது கழகம்தான்.

ஜூன்மாதம் 30ம்தேதி முதல்வர் கழகப் பொதுச்

### நாள்தோறும் 150கூட்டங்கள்

### மகளிர் - மாணவர் பிரச்சாரம்

செயலாளர் புரட்சித்தலைவர் மதுரையில் வேட்பாளர்களை அறிமுகப் படுத்தி தேர்தல் பிரச்சாரத்தை துவக்கிவைத்தார்.

அன்றிலிருந்தே கழகப் பிரச்சாரம் சூடு பிடிக்கத் தொடங்கி விட்டது.

நாள் தோறும் 150 நிகழ்ச்சிகள் என்று சொல்லும் அளவுக்கு கழகக் கூட்டங்களும், கலாநிகழ்ச்சிகளும் நடைபெற்று வருகின்றன.

கழக அமைச்சர்களும், முன்னணித் தலைவர்களும் பேச்சாளர்களும் தோழமைக் கட்சியினரும் இக்கூட்டங்களில் கலந்து கொண்டு பேசி வருகின்றனர்.

கழகப் பேச்சாளர்களும், கழகக் கலாநிகழ்ச்சிக் குழுவினரும் கழகக் கொள்கைகளையும், அரசின் ஓராண்டு சாதனைகள் பற்றியும் மக்களிடையே எடுத்துக் கூறி ஆதரவு திரட்டி வருகின்றனர்.

மதுரை மாநகரம் புரட்சித் தலைவரின் கோட்டை என்பதை நிரூபிக்கும் வகையில் மதுரை மாநகராட்சி தேர்தல் பணிக் குழுவினர் இரவு பகல் பாராது பரம்பரமெனச் சுழன்று பணியாற்றி வருகின்றனர்.

தேர்தல் பணிக்குழு பொறுப்பாளரான அமைச்சர் கா. காளிமுத்து மதுரைமுத்து, பாலகுரு எம்.எல்.ஏ., பொ. அன்பழகன் எம்.பி., வழக்கறிஞா பட்டுராசன் ஆகியோர் மதுரை மாநகராட்சியை புரட்சித் தலைவரின் கரங்களில் ஒப்படைக்கும் வகையில் அயராது பணியாற்றி வருகின்றனர்.

அமைச்சர் கா. காளிமுத்து தினமும் காலைமுதல் நள்ளிரவு வரை கழகத் தோழர்களுக்கு தேர்தல் வேலைகள் பற்றிய ஆலோசனைகளை எடுத்துக் கூறியும் பல்வேறு கூட்டங்களில் பேசியும் வருகிறார்.

65 வார்டுகளிலும் காலையிலிருந்து இரவுவரை நடைபெற்ற கழகச் செயல் வீரர்களின் கூட்டத்திலும் கலந்து கொண்டு பேசினர்.

தேர்தல் பணிக்குழுவினரோடு மாயத்தேவர் எம். பி., கூடலூர் ராமசாமி எம். பி. லட்சுமி நாராயணன் எம். எல். ஏ., ஆகியோரும் மற்றும் மதுரை, முகவை மாவட்டங்களின் நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களும் தீவிரமாக தேர்தல் பணி ஆற்றி வருகின்றனர்.

### புரட்சித்தலைவர் சூறாவளி பிரச்சாரம்

தேர்தல் பிரச்சாரத்தின் உச்சகட்டமாகக் கழகப் பொதுச்செயலாளர் முதல்வர் புரட்சித்தலைவர் இன்று (ஜூலை 21) முதல் 24ந் தேதி மாலை வரை மதுரையில் பிரச்சாரம் செய்கிறார்.

65 வார்டுகளிலும்,



கழக வேட்பாளர்களையும், கழகக் கூட்டணி வேட்பாளர்களையும் ஆதரித்து திறந்த வேனில் நின்றபடியே மக்களைச் சந்தித்து ஆதரவு திரட்டுகிறார்.

இரவில் பிரம்மாண்டமான முறையில் நடைபெறும் கழகப் பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டு லட்சக்கணக்கான மக்களை சந்தித்து ஓட்டு கேட்கிறார்.

மதுரை மாநகராட்சித் தேர்தலில் கழகம் பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றுவது உறுதி செய்யப்பட்ட ஒன்று ஆகிவிட்டது.

மதுரை மாநகராட்சி தேர்தலில் கழக வேட்பாளர்களையும் கழக கூட்டணி வேட்பாளர்களையும் ஆதரித்து மதுரையில் பல்வேறு இடங்களில் கலா நிகழ்ச்சிகள் நடைபெற்று வருகின்றன.

### கலைக்குழுவினர்

டேப் நடராஜன், தமிழ் மணி- மாலா, வாசன் விமலா, நெல்லை கலையரசன், சாமிநாதன்- ரஞ்சனி வண்ணை முத்துகுமார், வளர்மதி- ரத்தினம், இராசன் இளமதி, திருச்சி சாமி- சரளா, கலைக் குழுவினர் பிரச்சார, நிகழ்ச்சிகளில் ஈடுபட்டு ஆதரவு திரட்டி வருகின்றனர்.

இவர்கள் தவிர ராஜ்மோகன் குழுவினர் நடிக்கும் வெற்றித் திருமகன் நாடகமும், சாரதி குழுவினர் பங்கேற்கும் நாடகமும், முஸ்தபா குழுவினர் கலா நிகழ்ச்சியும் நாள்தோறும் நடைபெறுகின்றன.

பேரறிஞர் அண்ணா, முதல்வர் புரட்சித்தலைவர் ஆகியோரின் பெருமைகளைப் பற்றியும் கழகக் கொள்கைகளைப் பற்றியும் புரட்சித்தலைவர் தலைமையிலான கழக அரசின் ஓராண்டு சாதனைகள்பற்றியும் மக்கள் மத்தியில்விளக்கிச் சொல்லி ஆதரவு திரட்டி வருகின்றனர்.

அண்ணா

சந்தா விவரம்
1 வருடச் சந்தா தொகை ரூ. 120
6 மாதச் சந்தா தொகை ரூ. 60
3 மாதச் சந்தா தொகை ரூ. 30
3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது
நிர்வாகி
"அண்ணா"
275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-14.

# ஆஸ்திரேலிய நாடாளுமன்ற குழுவினருக்கு முனு ஆதி விருந்து

சென்னை, ஜூலை 21- ஆஸ்திரேலியாவில் இருந்து வருகை தந்த நாடாளுமன்றக் குழுவினருக்கு தமிழக சட்டப் பேரவைத் தலைவர் முனு ஆதி, மேலவைத் தலைவர் ம.பொ.சி. ஆகியோர் விருந்து அளித்தனர்.

ஆஸ்திரேலியவீட்டுவசதி அமைச்சர் ரேஞண்ட்ஜான் குரும் தலைமையில் எட்டு பேர் கொண்ட நாடாளுமன்ற தூதுக்குழு இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் சுற்றுப்பயணம் செய்துவிட்டு இலங்கை போகும் வழியில் தமிழகத்திற்கு வருகை தந்தனர்.

இக்குழுவினருக்குதமிழக சட்டப் பேரவைத்தலைவர் முனு ஆதி, மேலவைத்தலைவர் ம.பொ.சி. ஆகியோர் சார்பில் விருந்து அளிக்கப்பட்டது.

இந்த விருந்து உபசரிப்பில் தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் சட்ட அமைச்சர் நாராயணசாமி முதலியார், கூட்டுறவுத்துறை பார்லிமெண்டரி செயலாளர் ஆனூர் ஜெகதீசன், நிதித்துறை பார்லிமெண்டரிச் செயலர் நாஞ்சில் வின்சென்ட், மேலவை துணைத் தலைவர் ஜி. சாமிநாதன், மற்றும் சட்டமன்ற உறுப்தனர்கள், மேலவை உறுப்பினர்கள் சட்டசபை மேலவை செயலாளர்கள் ஆகியோர் வந்திருந்து கலந்து கொண்டனர்.

ஆஸ்திரேலிய தூதுக் குழுவினர் மகாபலிபுரத்தில் சிற்பங்களைக் கண்டு மகிழ்ந்தனர். பெரம்பூர் ரெயில்பெட்டி தொழிற்சாலையை அவர்கள் பார்வையிட்டனர். அதன்பிறகு இலங்கைக்கு புறப்பட்டுச் சென்று அங்கு ஒருவார காலம் சுற்றுப் பயணம் செய்கின்றனர்.

## மறைவு

சென்னை 78-வது வட்டம் கழக அமைப்பாளர் சி. மணிக்கண்ணனின் தாயார் காமாட்சியம்மாள் (வயது 58) காலை காலமானார்.

# மதுரை கழக வேட்பாளர்கள்

7. பட்டுராஜன் — சொக்கிக்குளம்
9. எஸ். சந்தானம் — புதூர்
17. பி. அறிவழகன் — மணி நகரம்
21. இ. நடராசன் — பெத்தானியபுரம்
22. மா. லட்சுமணன் — பொன்மேனி
23 வி. ராஜேந்திரன் — எஸ். எஸ். காலனி
27. எஸ். சங்கரன் — அழகரடி
44. ஜி. ரங்கசாமி — எஸ். பி. ஜி. சர்ச்
47. அலெக்சாண்டர் — அன்சாரிநகர்
58. ஒலிமுகமது — மஞ்சனக்காரத்தெரு

### பிரதமர் தேசாய் - சரண்சிங் எழுதிய கடிதங்களை வெளியிடா விட்டால்

# சபை நடக்க விடமாட்டோம்

## இந்திரா காங்கிரஸ் கடும் எச்சரிக்கை

புதுடெல்லி, ஜூலை 21- "தேசாய்க்கும் சரண்சிங்குக்கும் இடையே நடந்த கடிதப்போக்குவரத்தை வெளியிடாவிட்டால் நாடாளுமன்ற மேலவையை நடக்க விடமாட்டோம்" என்று நாடாளுமன்ற மேலவை இந்திரா காங்கிரஸ் கட்சித தலைவர் கமலபதி திரிபாதி அறிவித்தார்.

தேசாய், சரண்சிங் கடிதங்களை வெளியிடக் கோரி நேற்று நாடாளுமன்ற மேலவையில் கூச்சல் குழப்பம் நிலவியது. கடந்த 4 நாட்களில் 3வது தடவையாக இந்தப் பிரச்சினை குறித்து ஒத்தி வைப்பு தீர்மானம் கொண்டு வரப்பட்டது.

இந்திராகாங்கிரஸ் உறுப்பினர் வசந்த்சாத்தே ஒத்தி வைப்புதீர்மானம்கொண்டு வந்ததும் சபையில் கூச்சல் குழப்பம் நிலவியது.

உறுப்பினர்களை அமைதிப் படுத்த முடியாமல் துணை அவைதலைவர் ராம்நிவாஸ் மிர்தா திணறினார். "இப்படி கூச்சலிட்டுக்கொண்டிருந்தால் அவையை நடத்த முடியாது எனவே அவையைஒத்திவைக்கிறேன். முன்னதாக அவைத்தலைவரும், எதிர்க்கட்சித்தலைவரும் கூடி எப்படி அவையை நடத்துவது என்று பேசி முடிவு எடுங்கள்" என்று மிர்தா கூறினார்.

தேசாய்க்கும் சரண்சிங்குக்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்தை கட்டாயம்வெளியிட்டே தீரவேண்டும். சரண்சிங்கும் ராஜ்நாராயணனும் ஏன் ராஜினமா செய்தனர் என்றவிவரத்தையும் எந்தசூழ்நிலையில் அவர்களை ராஜினமா செய்ய தேசாய் வற்புறுத்தினர் என்பதை சபைக்கு தெரிவித்தே ஆக வேண்டும் என்று கமலபதி திரிபாதி கூறினர்.

அப்படி கடிதங்களை வெளியிடும் வரை இந்த சபையை நடத்த என் கட்சி (இந்திராகாங்கிரஸ்) அனுமதிக்காது என்றும் திரிபாதி சொன்னர்.

மாநிலங்களவை ஜனதா தலைவரும் அமைச்சருமான எல், கே. அத்வானி இதற்குப்பதிலளித்துக் கூறியதாவது:-

"அவைக் கூட்டத்தை நடக்க விடமாட்டேன் என்று பயமுறுத்துவது எதிர்க்கட்சித் தலைவருக்கு அழகல்ல. இப்படி மிரட்டுவதால் காரியம் நடக்கும் என்று எதிர்பார்த்தால் நிச்சயம் நடவாது.

தேசாய்க்கும் சரண்சிங்குக்கும் இடையே நடந்த கடிதப் போக்குவரத்தை வெளியிடு என்று வற்புறுத்துவதும் சரியல்ல.

இவ்வாறு எல். கே. அத்வானி கூறினர்,

இந்திரா காங்கிரசைச் சேர்ந்த என். ஜி. ரங்கா பேசும்போது "அவையின் கோரிக்கையை நிறைவேற்ருத தேசாய் ஸ்டாலினைப் போல பிடிவாதம் காட்டுகிறார்என்றுகுறிப்பிட்டார்.

நேற்று நடந்த நாடாளுமன்ற இந்திராகட்சி மேலிடக்கூட்டத்தில், தேசாய், சரண்சிங் எழுதிய கடிதங்களை வெளியிடும் வரையில் அவைக்கூட்டத்தைநடத்த விடுவதில்லை என்று தீர்மானிக்கப்பட்டது.

# கருணாநிதியை எதிர் கட்சித்தலைவர் என்று சொல்வது அவமானம்

மதுரை, ஜூலை 21- கருணாநிதியை எதிர்க்கட்சித் தலைவர் என்று சொல்வது கூட அவமானமாக உள்ளது. வார்த்தை அலங்காரத்தால் அவர் இனி மக்களை ஏமாற்ற முடியாது என தேங்காய் சீனிவாசன் கூறினர்.

கழக வேட்பாளர்களையும் கழகக் கூட்டணி வேட்பாளர்களையும் ஆதரித்து நடிகர் தேங்காய் சீனிவாசன், சென்னை மாநகர கழகப் பொறுப்பாளர் ஜேப்பியார் இருவரும் வாடு வார்டாகச் சென்று ஆதரவு திரட்டினர்.

தேங்காய் சீனிவாசன், ஜேப்பியார் ஆகியோர் சென்ற இடமெல்லாம் சிறப்பான வரவேற்பு தரப்பட்டது. நகரின் பல்வேறுஇடங்களில்தேங்காய் சீனிவாசன் கழகக்கொடிகளை ஏற்றி வைத்தார்.

## ராஜ்மோகன் நாடகம்

இரவில் 34வது வார்டு கழகவேட்பாளர் கே. எஸ் தாஜுதீனை ஆதரித்துமுனிச்சாலையில் மாபெரும் பொதுக்கூட்டம் நடந்தது. நீர்த்தான் அம்பலம் தலைமை வகித்தார்.

தேங்காய்சீனிவாசன் ஜேப்பியார் சட்டமன்ற உறுப்பினர்கள் சங்கரையா லெட்சுமி நாராயணன், செல்வராஜ், ராமசாமி மற்றும் செல்வி சந்திரா, பரங்கிமலை நாகராசன், மதுரை ஜமால், ராஜசேகரன், திருப்பதி, அலாவுதீன், இளஞ்செழியன், வேட்பாளர் கே. எம். தாஜுதீன் ஆகியோர் பேசினர்கள்.

கூட்டத்தில் ராஜ்மோகன் கலைக்குழுவினரின் 'வெற்றித் திருமகன்' நாடகம் நடைபெற்றது.

## தேங்காய் சீனிவாசன்

தேங்காய் சீனிவாசன் பேசியதாவது:-

கழகம் ஆட்சிக்கு வந்து ஒருவருடம் ஆகிறது. மக்களை ஏமாற்றியோ தில்லுமுல்லு செய்தோ ஆட்சியைப் பெறவில்லை. ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் இல்லா வகையில் கழக அரசு செயல்படுகிறது.

அண்ணாவின் கொள்கை வழியில் ஏழை, எளிய, பாட்டாளி மக்களுக்கு நன்மை செய்கிறார், புரட்சித் தலைவர்.

மக்களுக்கு அள்ளி அள்ளிக் கொடுத்த புரட்சித் தலைவர், இன்று ஓட்டை அள்ளித் தாருங்கள் என்று கேட்கிறார்.

## வெற்றி உறுதி

கருணாநிதியை எதிர்க்கட்சித் தலைவர் என்று சொல்லக்கூட அவமானமாக உள்ளது. வார்த்தை அலங்காரத்தால் அவர் இனி மக்களை ஏமாற்ற முடியாது. அண்ணா ஏற்படுத்தி தந்த ஆட்சியை கையை நீட்டியே கருணாநிதி கெடுத்துவிட்டார்.

ஆனல் இன்று புரட்சித் தலைவர் உட்பட யாரும் நிர்வாகத்தில் தலையிடுவதில்லை. கழகமும் தலையிடாது.

மதுரையில் நான் ஓட்டு கேட்டு வரும்போது தாய்மார்களின் முகத்தில் ஆவலைப்பார்த்தேன்.

மதுரை மாநகராட்சித் தேர்தலில் கழகம் வெற்றி பெறுவதுஉறுதி. இவ்வாறு தேங்காய் சீனிவாசன் பேசினர்.

# 'மிசா' சட்டத்தைரத்து செய்யும் மசோதா நிறைவேறியது

புதுடெல்லி, ஜூலை 21— மிசா எனப்படும் உள்நாட்டு பாதுகாப்பு - பராமரிப்பு சட்டத்தை ரத்து செய்யும் மசோதாவை நாடாளுமன்றம் பலத்த கரஒலிகளுக்கிடையே நிறைவேற்றியது.

இந்த மசோதா மீது நடந்த விவாதத்தில் கலந்து கொண்ட உறுப்பினர்கள் அனைவரும் மிசா சட்டம் ரத்தாவதை ஒருமுகமாக வாவேற்றனர்.

தடுப்புக்காவல் பிரிவுகளையும் நீக்க வேண்டும் என்று பல உறுப்பினர்கள் கோரிக்கை விடுத்தனர்.

விவாதத்திற்கு பதிலளித்து மத்திய உள்துறை துணை அமைச்சர் தனிக்லால் மண்டல் பேசுகையில் மிசாவை ரத்து செய்யும் இந்த மசோதாவை அனேகமாக அனைவரும் வரவேற்றனர். அதே சமயத்தில் சட்டம் ஒழுங்கு நிலையை அச்சுறுத்தும் வகையில் சில சக்திகள் தலைதூக்கும் தற்போதைய நிலைமையை உறுப்பினர் கருத்தில் கொள்ளவேண்டும். வன்முறைகளில் ஈடுபட்டு குழப்பத்தை விளைவிக்கும் போக்கு உள்ளது என்றார்.

அவர் மேலும் குறிப்பிடுகையில் "சட்டம் ஒழுங்கு நிலைமையை பராமரிக்கும் ... அனைவரும் ஒத்துழைப்புத் தரவேண்டும். இந்த முறையில் முதலமைச்சர்கள் அரசியல்மற்றும் கட்சிதலைவர்கள் மாநாடு ஒன்றை விரைவில் நடத்த மத்தியஅரசுஏற்பாடு செய்யும்' என்ருர்.

# புதுக்கோட்டையில்காமராஜர்விழா: இளஞ்செழியன்எம்.பி. பங்கேற்ருர்

புதுக்கோட்டை, ஜூலை 21- புதுக்கோட்டையில் அரசு சார்பில் நடந்த காமராஜர் விழாவில் வீ. சா. இளஞ்செழியன் எம். பி. பங்கேற்றார்.

பெருந்தலைவர் காமராஜர் பிறந்தநாள் விழா புதுக்கோட்டை நகர மண்டபத்தில் மாவட்ட வருவாய் அலுவலர் டி. ராஜாராமன் தலைமையில் நடைபெற்றது.

தமிழ்நாடு சட்டமன்ற துணை சபாநாயகர் எஸ். திருநாவுக்கரசு பேச்சுப் போட்டியில்வெற்றிபெற்ற மாணவ மாணவிகளுக்கு பரிசுகள்வழங்கியும், 1976-77ம் கல்வி ஆண்டில் எஸ். எஸ்.எல்.சி. தேர்வில் 100 விழுக்காடு வெற்றி பெறச் செய்த புதுக்கோட்டை மூன்மாதிரி பள்ளிக்கு பெற்றோர் ஆசிரியர் சங்கத்தால் வழங்கப்பட்ட ரூ. 200ம் அப்போதைய பள்ளி தலைமைஆசிரியருக்கு ரூ. 50ம் வழங்கியும் பெருந் தலைவர் காமராஜரின் பண்பு, தியாகம்' புகழ்பற்றி சிறப்புரையாற்றினர்.

விழாவில் நாடாளுமன்ற உறுப்பினர் வீ. சா.இளஞ்செழியன், கழக அமைப்பாளர் சி. அன்பரசன், திருமயம் தொகுதி சட்டமன்ற உறுப்பினர் ஆர். சுந்தரராசன், ஏ. கருப்பையா உடையார், கே. ஆர். சுப்பையா, கே. வாசுதேவன் ஆகியோர் பெருந் தலைவர் காமராஜரின் சிறப்புகள் பற்றி உரையாற்றினர்கள்.

திருச்சி புத்தனம்பட்டி நேரு நினைவுக் கல்லூரியின் பேராசிரியர் அ. வெ. ராஜகோபாலன், பெருந்தலைவர் காமராஜர் பற்றி சொற்பொழிவாற்றினர். பள்ளி மாணவ மாணவியரின் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.